15th December 1961]

*Textile Mills*

* 2358 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கதர் அபிவிருத்தித் திட்டம் அமுலில் உள்ள இடங்களில் பஞ்சாலைகளுக்கு லைசென்ஸ் தர முடியாதென்பது உண்மையா ?

(இ) அப்படியாயின் அதன் நோக்கமென்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) & (இ) A report has been called for from the State Khadi and Village Industries Board and it is awaited.

SRI S. M. ANNAMALAI : அப்படி கதர் அமைத்துள்ள இடங்களில் ஏன் பஞ்சாலை அமைக்கக்கூடாது? இது மத்திய சர்க்கார் கொள்கையா, மாநில சர்க்கார் கொள்கையா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதைப்பற்றி சரியான தகவல் என்னிடம் இல்லை. ரிபோர்ட் கேட்டிருக்கிறோம். அது வந்தால்தான் விஷயம் தெரியும்.

*House-sites for Harijans*

* 2359 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) the actual amount of expenditure incurred for acquiring house-sites for Harijans in the State during the year 1960–61;

(*b*) the total number of house-sites acutally distributed during the year 1960-61;

(*c*) the average cost per house-site, and

(*d*) the average number of house-sites per acre of land acquired?

THE HON. SRI P. KAKKAN : (*a*) to to (*d*) A statement is placed on the table of the House.

SRI M. KALYANASUNDARAM : இந்த மனைக்கட்டுகள் வழங்குவதில் துரிதமான நடவடிக்கை எடுக்கப்படவில்லை என்பதைத்தான் கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கும் அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தவிதமாக துரிதமாக நடவடிக்கை எடுக்காததற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI P. KAKKAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, அவர்கள் கேட்ட கேள்விக்கு இதுபரியந்தம் ரூ. 19,81,698-11-க்கு சர்க்கார் ஹவுஸ் சைட்டுகள் வாங்கியிருக்கிறோம். 16,224 ஹவுஸ் சைட்டுகள் பிரித்துக்கொடுக்கப்பட்டிருக்கின்றன. இப்போது அதிக அக்கரை எடுத்துக்கொண்டு ஹவுஸ் சைட்டுகள் கொடுக்கப்படுகின்றன. இந்த மனைக்கட்டுகளை அக்வை

a Printed as Appendix I on page 1092 infra.